Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 361

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீவரதராஜப்பெருமாள் ஸ்ரீ திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
மூய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

10—6—1978

# ஸ்ரீவைகுண்டகத்யமும் - நித்யக்ரந்தமும்

எம்பெருமானாருளிச் செய்த நவநிதி நவரத்னங்களான திவ்யக்ரந்தங்களுள் ஸ்ரீவைகுண்டகத்யமானது ஏழு சூர்ணிகைகளாக வகுக்கப்பட்டுள்ளது அவற்றுள் மூன்றாவது சூர்ணிகையில் "ப்ரணம்ய, உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றுள்ளது; பகவதாராதந ப்ரயோகமாக அருளிச்செய்த நித்யக்ரந்தத்தில் பூதசுத்தி முதலானவற்றை யருளிச்செய்து தலைக்கட்டின பின்பு—"மூலமந்த்ரேண தண்டவத்ப்ரணம்ய, உத்தாய ஸ்வாகதம் நிவேத்ய யாவதாராதநஸமாப்தி ஸாந்நித்ய யாசநம் குர்யாத்" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது இங்கு [நித்யே] "ப்ரணம்ய உத்தாய" என்றிருப்பதையும், [கத்யே] "உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றிருப்பதையும் எங்ஙனே பொருந்தவிடுவது? என்று கேட்குமவர்களுக்கு விடையளிக்கிறோம். எம்பெருமானார் திருக்கோட்டியூர்நம்பியை ஸேவிக்க அவ்விடமெழுந்தருளி ஒரு திருவீதியின் முகப்பே நின்று 'நம்பிகளின் திருமாளிகை எங்குள்ளது? என்று சிலரை வினவியருள, அவர்கள் 'அதோ தெருக்கோடியிலுள்ளது காணீர்!' என்றுகாட்ட, உடனே ஸ்வாமி அங்கிருந்து திருவடிகளால் நடந்து செல்லாமல் ப்ரணாம பரம்பரைகளினாலேயே யெழுந்தருளி நம்பிகளை ஸேவித்து நின்றாராம். அதே போன்ற ப்ரணாம பரம்பரைகளே இங்குச்சொல்லப்படுவது. இதற்கு நல்ல ஸூசகமுண்டு;—கத்யத்தில் *உத்தாயோத்தாயவுக்கு முன்னே—"தூராதேவ பகவந்தம்..." என்று தொடங்கி "பகவந்! மாம் ஐகாந்திகாத்யந்திக பரிசர்யாகரணாய பரிக்ருஹ்ணீஷ்வேதி யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்." என்று நிகமிக்கப்பட்டுள்ளது (உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய) என்றுள்ள சூர்ணிகையிலேயே (ப்ரணம்யாத்மாநம் நிவேதயேத்) என்றிருப்பதை உற்று நோக்கவல்லார்க்கு உண்மைதெரியும். ஓரிடத்திலேயே நின்று கொண்டு அஸக்ருத்ப்ரணாமம் செய்வது விவக்ஷிதமாயிருந்தால் (புந: புந: ப்ரணம்ய) என்னுமளவே போதுமானது. (உத்தாயோத்தாய) என்பது அஸமர்த்தப்ரயோகமாகும்; உத்தானமின்றிக்கே புந: புந: ப்ரணாமம் செய்ய இயலுமோ? நித்யக்ரந்தத்தில் [ப்ரணம்ய உத்தாய] என்று ஸாதித்தருளினது, இந்நிலத்தில் இபற்கையாக நடைபெறும் ரீதியைப் பணித்தபடி. அங்கு [ப்ரணம்ய] என்கிற பதம் எத்தனை விசை வருகிற தென்று எண்ணிப்பார்க்கவேணும்.

ஸ்தோத்ரரத்நத்தில் *நமோ நமோ வாங்மநஸேத்யாதி ச்லோக பாஷ்யத்தில் தேசிகன் "ப்ரஶம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபி ச, பயே ச விஜயே சைவ பௌந:புந்யமலங்க்ருதி:" என்றருளிச் செய்தது ஸாரம். புந: புநரநுஷ்டானமிருந்தால் *பௌந: புந்யமலங்க்ருதி:* என்னப் பொருந்தாதே. ... ... ◎

— ப்ரபதநே பௌந: புந்யம் நிவாரயந் ஸ்ரீரங்கபர்த்துர்ஹஸ்த: அவ்யாத் —

---

சந்தாதாரர்களுக்குக் குறிப்பு:— இம்மாதப் பத்திரிகை பலர்க்கு நிறுத்தியாயிற்று; அடுத்த மாதம் இன்னமும் பலர்க்கு நிறுத்தப்படும்

—பத்ராதிபர்.

# ஸ்ரீராமாநுஜன்-361

ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
*அண்ணங்கராசாரிய ஸ்வாமி*

தொகுதி—31 | காளயுக்திஸ்ரீ வைகாசிமீ 10—6—1978 | பகுதி—1


## வையங்கண்ட வைகாசித்திருநாள்

காஞ்சீபுரத்தில் தேவப்பெருமாளுக்கு நடைபெறும் வைசாகமாஸ ப்ரஹ்மோத்ஸவத்திற்கு வையங்கண்ட வைகாசித் திருநாளென்றே அநாதி காலவழக்கு. உலகமெல்லாம் திரண்டுவந்து ஸேவிக்குந் திருநாள் என்பது பொருள். சின்ன காஞ்சீபுரத்திலிருந்து பெரிய காஞ்சீபுரத்திலுள்ள கங்கைகொண்டான் மண்டபத்திற்குத் தேவப்பெருமாள் காலையிலும் மாலையிலும் வாஹனப் புறப்பாடு கண்டருளி யெழுந்தருளும் மஹோத்ஸவமிது. கோபுர ஜீர்ணோத்தாரண நிமித்தமாக இந்த ப்ரஹ்மோத்ஸவம் சென்றவாண்டில் நடைபெறாது நின்றிருந்தபடியால் இவ்வாண்டில் அடியார்கள்குழாம் அளவுகடந்துகாணப்பட்டது. வெய்யிலின் கொடுமை பொறுக்க முடியாததாயிருந்தாலும் காஞ்சீபுரத்தின் எல்லாப்பகுதிகளிலும் ஜனஸஞ்சாரம் இடையறுதிருந்தது ஒன்றே குறிப்பிடத்தக்கது. பெரிய காஞ்சீபுரத்தில்ஒருவீதிக்கு ராஜவீதியென்கிற பெயர் வெகுகாலத்திற்கு முன்பு ஏற்பட்டு இற்றைக்கும் மாறுபடாது விளங்கி வருகின்றது. வனபர்த்திராஜா, கத்வால்ராஜா, ஜடப்ரோல்ராஜா. மைஸூர்ராஜா என்று ப்ரஸித்தர்களாயிருந்த பல அரசர்கள்(ரைல்பாதை ஏற்படாதிருந்த காலத்தில்)இரண்டொருமாதத்திற்கு முந்தியே



தம்தம் பெட்டிவண்டிகளில் புறப்பட்டுவந்து ஒவ்வொருமாளிகையில் தங்கியிருந்து திருநாள் ஸேவித்துப் போவர்களாம் அதனாலேயே ராஜவீதியென்று பெயராயிற்றாம். இங்ஙனம் கேள்வியே யொழியக் கண்டாரில்லை. இவ்வாண்டு காலகாலத்தில் உத்ஸவம் நடைபெற்றது. திருத்தேர் செப்பனிடவேண்டிய நிலைமையில் இருப்பதால், ஒருபகல் பெருமாள் திருத்தேரில் எழுந்தருளியிருந்து பக்தர்களுக்குக் காட்சிதந்தருளி இரவே ஸன்னிதி சேர்ந்தாயிற்று. அன்றுமாலைவருணபகவான் சிறிதுகண்திறந்தனன்.

## நம் ஸ்ரீராமாநுஜனுக்கு அப்தபூர்த்தி

"தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகிநே" என்று உலகம் போற்றும் பரமாசார்யருடைய திருநாமம்பூண்டு மாதந்தோறும் வெளிவருகின்ற நமது பத்ரிகைக்கு முப்பது பிராயம் பூர்த்தி யடைந்து இப்போது முப்பத்தோராவது பிராயம் தொடக்கமாகிறது. பெருந்தேவி மணவாளனை பேரருளாளனுடையவும் பரமபாகவத சிகாமணிகளுடையவும் அன்பும் ஆதரவும் என்றும் ஒருபடிப்பட்டிருக்கவேணுமென்பது நமதுபிரார்த்தனை சந்தாசெலுத்தாதவர்களுக்குப் பத்ரிகை நிறுத்தப்பட்டது.

## விசேஷித்து விஜ்ஞாபிப்பது

நான்கு வருஷங்களுக்கு முன்பு P. B A. என்கிற அடியேனுக்கு நேத்ரபாடவம் குறைவாக இருந்து நேத்ரசிகித்ஸை செய்துகொண்டதன் பலனாகப் பழையபடி நேத்ரபாடவமுண்டாகியிருந்தது. கண்டாக்டருடைய கட்டளையை முற்றிலும் பரிபாலிக்க முடியாமலிருந்ததன் பலனாகச் சில மாதங்களாய்ப் பார்வை மிகமிகக் குன்றி வருகிறது. புத்தகங்களையோ பத்ரிகைகளையோ தபால்களையோ எதையும் படிக்கக்கூடாதென்கிற கண்டாக்டர் கட்டளை வலிதாகவுள்ளது. அதைப் பரிபாலித்தேயாக வேண்டியிருக்கின்றது. எழுதுவதற்கு மட்டும் அனுமதி கொடுத்திருப்பதற்கு உகக்கிறேன். நான் எழுதுமவை உடனுக்குடனே அச்சாகிவருகின்றன. அச்சுப்பிழை திருத்துவதாகிற ப்ரூப் கரெக்ஷன் செய்வது முக்கியமானபணி. அதை நான் சொந்தமாகச் செய்ய முடியாதபடியால் தகுந்தவர்களை நியமித்திருக்கிறேன். ஆனாலும் சிற்சில பிழைகள் நேர்ந்து விட்டால் வாசகர்கள் ஸமீகரணம் செய்துகொள்ள வேணும். பிறர் மதிமயக்கத்தால் தப்புந்தவறுமாக எழுதிவிட்டு அச்சுப்பிழை யென்று மழுப்பிவிடுவதுமுண்டு; அந்த நிலை நமக்கு நேராதபடி பார்த்துக்கொள்ளுவோம். அச்சுப்பிழை யென்பது இரண்டுவிதம். எம்பெருமானார் என்கிற சொல் எபருமனார் என்று விழுந்துவிடுவது அனைவருமறிந்த அச்சுப்பிழை "எம்பெருமானார் ஸ்ரீகுணரத்நகோசத்தில் இப்படி ஸாதித்தார்" என்றிருந்தாலும், பாஷையின் நரம்பை யறியாமல் [ர—ற—ந-ன—இவைபோன்ற எழுத்துக்களின் தன்மையை யறியாமல் ருமசாமி சொந்நாந்—காலக்ஷேபம் குறைவர நடபத்து வருகிறது—என்றெழுதப்பட்டிருந்தாலும் இதையெல்லாம் அச்சுப்பிழை யென்று யாரும் கொள்ளார். நமது ஸ்ரீராமாநுஜனில் அச்சுப்பிழையோ ஹல்லுப்பிழையோ நேராதபடிக்குக் கவனித்துக் கொள்வோம்

இதை நாம் எழுதிக்கொண்டிருக்கையில் ஸ்ரீஉவே. புத்தூர் அட்வகேட் ஸ்வாமியின் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகையின் சித்திரை மாதவிதழ் கிடைத்தது; கண்டாக்டருடைய கட்டளையை மீறியாகிலும் நெடுகவாசித்து முடிக்கவேணுமென்று குதூஹலமுண்டாயிற்று. ஆயினும்ஸாஹஸத்தில்ருசிதவிர்ந்து,பிறகுசெவியாரப்பருகுவோம்

# அடியேனுடைய ஸமாசாரங்கள்

கடந்த சித்திரை மாதத்தில் பத்துநாளும் ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வக்ருஹம் போன்ற ஒரு ராமாநுஜ கூடத்தில் இருந்துகொண்டு எம்பெருமானாருடைய திருநக்ஷத்ரமஹோத்ஸவத்தை யனுபவித்தபடியைச் சென்றவிதழில் விஜ்ஞாபித்திருந்தேன். நிகழும் வைகாசி மாதத்தில் தேவப்பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவத்தை யநுபவித்தபடிகளையும்சிலபல ஸுஹ்ருத்ஸல்லாபங்களையும் பற்றி விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். தேவப்பெருமாளுடைய உத்ஸவங்களை—பஞ்சபர்வோத்ஸவங்கள் நைமித்திகோத்ஸவங்கள் என்கிற வாசியற ஸமரூபமாக இடைவீடின்றி அநுபவித்துக் கொண்டிருந்தவன் அடியேன்; இதில் *எனக்காரும் நிகரில்லையே* என்று இறுமாப்புடன் சொல்லிக்கொள்ளவும் துணிவேனடியேன். இரண்டு வருஷமாக வய: ப்ரயுக்தமான அசக்தியின் மிகுதியால் அநுபவங்களை க்ரமேண இழக்க நேர்ந்தது இடையில் கோபுர ஜீர்ணோத்தாரண வியாஜத்தினால் பேரருளாளனுடைய உத்ஸவங்கள் யாவும் ஸன்னிதிக்குள்ளே திருமுற்றவெளியிலும் ஆழ்வார் திருவீதியிலுமே நடந்துவந்தன. அப்படி நடந்துவந்தது பதினெட்டு மாதங்கள். ஒன்றரை வருஷ காலமாகும். "நம்முடைய வாழ்நாள் வரையில் இப்படியே நடந்தேறுமா?" என்றுகூடப் பாவியேன் நெஞ்சு பாரித்திருந்தது. இப்படித் தோன்றியது மஹாபசாரமே. இப்போது ஸன்னிதி வீதியிலுங்கூடப் பூர்த்தியாக அநுபவிக்கப் பெறுமல் ஸ்வல்பாநுபவத்தோடு ஒருவாறு க்ருதார்த்தனாயினேன். ஆகின்றேன்.

அடியேன் நம்பிள்ளை ஸன்னிதியிலேயே பத்து நாளும் குடிகொண்டிருந்தபடியால் உத்ஸவ ஸேவார்த்தமாக எழுந்தருளியிருந்த (தென்கலையார் வடகலையார் என்னும் வாசியற) ஸ்வாமிகள் யாவரும் அடிக்கடி அருகேவந்து ஸேவை ஸாதித்து ஸல்லாபங்கள் செய்தது ஒரு புத்தகமாக எழுதத்தக்கதென்றால் மிகையாகாது. சிலருடைய ஸல்லாபங்களைமட்டும் இப்பத்திரிகையிலேயே வெளியிடவேணுமென்று ஆவல் கிளர்ந்தது. எழுதத் தொடங்கினால், எதை யெழுதுவது! எதை விடுவது!

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமதழகிய சிங்கர் ஸ்வாமி பெரிய திருவடி ஸேவைக்கு முன்பின்னாகச் சில வேளைகளில் உத்ஸவாநுபவத்திற்கு முக்கூரிலிருந்து இவ்விடம் எழுந்தருளியிருந்தபடி. இரண்டாந் திருநாளிரவு ஸூர்யப்ரபை யுத்ஸவம் ஸன்னிதிக்குத் திரும்பியெழுந்தருளும் கோஷ்டியில் அடியேனைக் கடாக்ஷித்தருள விரும்பியிருந்தும் அந்தக் கடாக்ஷ விசேஷத்தை அடியேன் இழக்க நேர்ந்துவிட்டது. மறுநாள் பெரிய திருவடி யுத்ஸவத் திரும்புகாலில் கோஷ்டி முடிவில் சந்தித்து "நேற்றிரவு ஏன் கோஷ்டிக்கு வரவில்லை?" என்று கேட்டருளும்படியாயிற்று. இந்தக் கேள்வியைப் பேரருளாளன் தானே கேட்டருளினதாக அடியேன் நிச்சயித்து அன்று முதலாகச் சிறிது அதிகமாகவே கோஷ்டியை அநுபவித்து வந்தேன். ...

# ந்ருஸிம்ஹப்ரியாவில் திருப்பாவை விவரணம்

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதழகியசிங்கரின் அருள்மொழியான திருப்பாவை விவரணம் நிகழும் வைகாசிமாதப்பத்திரிகையில் 9. தூமணிமாடம். 10. நோற்றுச் சுவர்க்கம். 11 கற்றுக்கறவை ஆகிய மூன்று பாசுரங்களுக்கு அற்புதமாக வெளிவந்துள்ளது. "அற்புதமாக" என்று நாம் ஒவ்வொரு தடவையும் எழுத வேண்டுமோ? இது வொரு அபூர்வ வியாக்கியானம் என்பதை அடியேன் பலகால் விஜ்ஞாபிக்க வேண்டா. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி (மைஸூர்) ஸ்ரீபரகாலமடாஸ்தாநாதிபதி ஸ்வாமியொருவர் ஹம்ஸஸந்தேசத்திற்கு எழுதியச்சிட்டுள்ள ஸம்ஸ்கிருதவியாக்கியானமும், காஞ்சீ. வித்வத்வரேண்ய. ஸ்ரீ. பட்டப்பாதாதாசாரியர்ஸ்வாமியெழுதி அச்சிட்டுள்ள ஸுபாஷித நீவீ ஸம்ஸ்க்ருத வியாக்கியானமும் போலே இந்தத்திருப்பாவை வியாக்கியானமும் ரஸிகர்களுக்குப் பரம போக்யமென்பது அதிசயோக்தியன்று அடுத்த மார்கழிமாதப் பிறப்புக்குள் இந்தத்திருப்பாவை விவரணம் பூர்த்தியாகித் தனிப்புத்தகமாக வெளிவரவேணுமென்பது அடியேன் போல்வாருடைய ஸவிநய ப்ரார்த்தனை

# ஆசார்ய ஸூக்திகளில் அவத்யம் நேரக்கூடாது

நமக்கு உபய வேதங்களைக் காட்டிலும் ஆளவந்தார் உடையவர் ஆழ்வான் பட்டர் முதலான ஆசார்யவர்யர்கள் அருளிச்செய்த திவ்யஸூக்திகள் நிதியானவை. அவற்றைக் கண்டபாடம்செய்து நித்யாநுஸந்தானம் செய்பவர்கள் மிகச்சிலரே. சில ரென்பதேன்? இல்லவேயில்லை யென்றே சொல்லலாம். அவ்வாசார்ய ஸூக்திகளில் பிறழ்வுகண்டால் அடியேன் மனம் ஸஹித்திருப்பதில்லை. அப்பிறழ்வுகளைக் கூசாமல் எடுத்துக் காட்டுபவன் அடியேனொருவனே. இதை யாரும் மாத்ஸர்ய கார்யமாகவோ அஸூயா நிபந்தனமாகவோ நினைக்கக்கூடாது. நாம்காட்டும் பிறழ்வுகளைப் பிராமாணிகர்களாய்த் திருத்திக் கொள்ளவோ உள்ள பிறழ்வுகட்கு உபபத்தி காட்டவோ முற்படவேணும்.

வைகாசிமாத ந்ருஸிம்ஹப்ரியாவில் (பக்கம் 33ல்) "ஆசார்ய வைபவம்" என்ற மகுடத்தின்கீழ் ஸ்ரீ வீரராகவ சடகோப யதீந்திர மஹாதேசிகன் தேவப்பெருமாளை மங்களாசாஸனம் செய்தருளும்போது அவர் சிந்தித்ததாகவோ வாய்விட்டு அநுஸந்தித்ததாகவோ ஆழ்வானுடைய சில சுலோகங்கள் வரையப்பட்டுள்ளன; அவற்றில் "ஸதாதநத்வேபி ததாதநத்வவத் நவீபவத் ப்ரேமரஸப்ரவாஹஜம்" என்று அந்தபரம்பரையில் வந்த அபபாடம் அச்சிடப்பட்டுள்ளது. இதில் (ப்ரவாஹஜா) என்கிற ப்ரதமாந்த விசேஷணம் எந்த விசேஷ்யத்தில் அந்வயிக்கிறதென்று பார்க்கவேணும். இதற்கு முன்னே "இமம் ஜநம்" என்கிற சுலோகம் உதாஹரிக்கப்பட்டுள்ளது. அதில் "அக்ருத்ரிமப்ரேமரஸப்ரவாஹஜா" என்று மூன்றும் பாதமுள்ளது. அது வீக்ஷண வீசிஸந்ததிக்கு விசேஷணமாகையாலே பொருத்தமானதேயாம். "ஸதாதநேத்யாதி ச்லோகத்தில் ச்ரியா என்கிற விசேஷ்யபதத்திலந்வயிக்கும் விசேஷணமாக "நவீபவத் ப்ரேமரஸ ப்ரவாஹயா" என்று த்ருதீயாந்தமா[க]

அருளிச்செய்யப்பட்டிருந்தது. அப்பாடம் பிறழ்வுற்றுச் சிலரால் (ப்ரவாஹஜா) என்று (காஞ்சீபுரவாஸிகளாலும்) ஓதப்பட்டுவந்ததுண்டு; இது ந்ருஸிம்ஹப்ரியாவில் எங்ஙனே புகுந்ததென்பது தெரியவில்லை.

இந்த ஸந்தர்ப்பத்தில் வேதத்தில் ஒருபதத்தைப் பற்றின விமர்சத்தை விஜ்ஞாபிக்கிறேன். தைத்திரீய ஸம்ஹிதையில் முதல் காண்டம் இரண்டாவது ப்ரச்நத்தில் *க்ருணுஷ்வ பாஜ:* இத்யாதி அநுவாகத்தில் *அஸ்வப்நஜஸ் தரணய ஸ்ஸுசேவா அதந்த்ராஸ:* இத்யாதி வாக்யமுள்ளது. இதில் எல்லாப்பதங்களும் பஹுவசநாந்தமே. (அஸ்வப்நஜ:) என்கிற பதத்திற்கு–அஸ்வப்நஜ இத்யஸ்வப்ந–ஜ: என்று அவக்ரஹம் (வேஷ்டநம்)ஓதப்பட்டு வருதலால் இது பஹுவசநாந்தமாயிருக்கக்கூடாமையாலே பஹுவசனப் பொருளில் ச்சாந்தஸமான ஏகவசனமென்று வித்யாரண்ய பாஷ்யத்தில் காண்பது பட்டபாஸ்கரர் தமது பாஷ்யத்தில் தெளிவுகாட்டியுள்ளார். லோகத்திலும் (ஸ்வப்நக்)என்றொருபதமுண்டு கோசங்களில் காணலாம் தூங்குகிறவன் என்பது பொருள் ந-ஸ்வப்நக்=அஸ்வப்நக் (பஹுவசனத்தில்) அஸ்வப்நஜ: [அஸ்வப்நக், அஸ்வப்நஜௌ, அஸ்வப்நஜ: என்ற ரூபம் ] இப்படிக் கொள்ளுமளவில் இங்கு ச்சாந்தஸ வ்யத்யயங் கொள்ள ப்ரஸக்தியே கிடையாது; இங்ஙனே பொருத்தமாக எழுதின பட்டபாஸ்கரர் உடனே என்ன எழுதினரென்றால் "இவ்விதமான யோஜனை பதகாரருக்கு அநபிமதமாகையாலே" என்று காரணங் கூறி வித்யாரண்யர் பணித்தபடியே பொருளுரைத்தார் [அஸ்வப்நஜ இத்யஸ்வப்ந-ஜ:] என்கிற பதபாடத்திற்கு ப்ராதாந்ய மளித்தாரென்றபடி

ஸம்ஹிதை போலவே பதபாடமும் அபௌருஷேயமே யென்பதுதான் அடியேனுடைய ஸித்தாந்தம்; இவ்விடத்தில் வேஷ்டநத்திற்கு ப்ரஸக்தி யில்லாமலிருக்க, அது உலகமெங்கும் எப்படியோ வியாபித்து விட்டது. ப்ராஸங்கிகமாக நினைவுக்கு வந்த இவ்விஷயம் நிற்க ப்ரக்ருதே ந்ருஸிம்ஹப்ரியா ப்ரகாசிதமான (ப்ரேமரஸப்ரவாஹஜா) என்கிற பாடம் த்ருதீயாந்தமாயிருக்க வேண்டியதற்குச் சேர) [ப்ரவாஹஜா–ப்ரவாஹக்ப்யாம்–ப்ரவாஹக்பி:] என்று ரூபம் சொல்லப்பொருத்தமாயிருக்குமோவென்று ஒரு தோற்றமுண்டாயிற்று. சிறந்த நிரூபகர்கள் இதை விமர்சிக்க.

ந்ருஸிம்ஹப்ரியா-ஆசார்யவைபவக் கட்டுரையில் (பக்கம்-33ல்) ஸ்ரீவீரராகவ சடகோப யதீந்த்ரமஹாதேசிகன் தேவப்பெருமாளை மங்களாசாஸனம் செய்தருளினபோது "யோஸௌ மேதாச்ருதாத்யை" இத்யாதியான ஒரு ஸ்ரக்தராச்லோகம் அநுஸந்தித்ததாக எழுதப்பட்டுள்ளது. இதுயார் பணித்ததோ?எங்குள்ளதோ?அறியோம். இதில் மூன்றாவது பாதம் "வேதோலப்தாச்வமேதோ கரிகிரிசிகரே..." என்று காணப்படுகிறது. இப்படியும் ஒரு ஸந்திசாஸ்த்ரம் கண்டதுண்டோ? "மேதோ கரி" என்றவிடத்தில் (அகரி)என்று பதவிபாகம் விவக்ஷிதமா? ப்ரக்ருதச்லோகம்தேவநாகர லிபியிலும் தமிழிலும் இப்படி அச்சிடப்பட்டிருப்பதால் அச்சுப்பிழையென்பதற்கில்லை.

அதிலேயே (பக்கம் 17ல்) *யம் பரோக்ஷமுபதேசத:* என்கிற சுலோகத்தில் (பரிபர்யுதாஸத:) என்று காண்கிறது. இதுவும் அநவதானம். அதிலேயே (பக்கம் 19ல்) *வேதாந்த தேசிக பதாம்புஜ மேவ நித்யம்* என்கிற சுலோகத்தின் நான்

காவதுபாதம்-''புத்தி: ப்ரஸீததி விபூதியுகாவலம்பீ'' என்று காணப்படுகிறது அவலம்பீ என்கிறபதம் பும்லிங்க விசேஷணபதமென்பது நிஸ்ஸந்தேஹம் இதற்கு யோக்யமான விசேஷ்யபதம் எதுவும் அந்த சுலோகத்தில் காணப்படவில்லை; இதை ஜிஜ்ஞாஸ ப்ரச்நமாகக் கொண்டு சுலோகத்திற்குப் பொருளுரைக்கவேணும்.

**பொறுப்பித்தல்** என்னும் பொருளில் க்ஷமாபணம் என்றும் க்ஷாபணம் என்றும் சிலர் எழுதுவதுண்டு. இரண்டும் பொருத்தமற்றதே. க்ஷாமணம் என்பதே பொருத்தமானது. (ப்ரியாவில்) க்ஷாபணம் என்றிருக்கக் கண்டமையால் சப்தஸ்வரூபவுண்மை தெரிந்துகொள்ள இஃது எழுதப்பட்டது.

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதழகியசிங்கர் ஸன்னிதியில் சில மாதங்களுக்கு முன்பு ஒருஸமயம் தெண்டன் ஸமர்ப்பித்து ''ப்ரியாவில் அச்சுப்பிழைகள் புகாதபடிக்கு நியமித்தருளவேணும்'' என்று அடியேன் பிரார்த்தித்தபோது, ''ஏற்கனவே நியமித்தாயிற்று; சோதனத்தில் கவனிப்பில்லாத வொருவனை விலக்கினதாகவும் தெரிவித்திருக்கிறார்கள்'' என்று ஸாதித்தருளக் கேட்டேன். ... ...

# ஸ்ரீவைஷ்ணவ தர்சன ஸாரார்த்த ஸம்வாதம்-2.

(முன்னிதழ்த்தொடர்ச்சி)

சிஷ்யன்— ஸ்ரீ தேசிகன் பணித்த யதிராஜ ஸப்ததியில் "யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம்" என்கிற சுலோகத்தைப் பூர்த்தியாகப் பாராமலும் சொல்லாமலும் வஞ்சகமாகப் பேசுமவர்களின் பேச்சில் அடியேனும் மயங்கிக்கிடந்தேன். தேவரீர் ஸாதித்த விளக்கத்தினால் தெளிவுபெற்றேன். தேவரீர் ஸாதித்தருளின விஷயங்களைப் பலரிடத்தில் விவரித்துரைத்து அவர்களையும் த்ருப்திபெறவித்தேன். விசிஷ்டாத்வைத தரிசனத்தின் தத்துவங்களை அடியேன் ஆங்காங்கு உபந்யஸிக்க ஆசை கொண்டிருப்பதால் அதை அடியேனுக்கு தேவரீர் நன்கு உணர்த்தியருளவேணுமெனப் பிரார்த்திக்கிறேன்.

ஆசிரியர்— ஸ்ரீராமாயணம் ஸ்ரீபாகவதம், ஆழ்வார்கள் வைபவம்—என்றிப்படிப்பட்ட விஷயங்களை யெடுத்துக்கொண்டு உபந்யஸித்தால் கேட்பவர்கள் குதூஹலத்தோடு ரஸித்துக் கேட்பர்கள்; பகவத்கீதை யுபந்யாஸம், விசிஷ்டாத்வைத உபந்யாஸம் என்றால் சிலர்க்கு ருசிப்பது அரிது. விஷயம் கடினமாயிருப்பதுதான் இதற்குக் காரணம். நீ சிரத்தையோடு கேட்க விரும்புவதால் விஷயத்திலுள்ள கடினத்தன்மையைக் கூடுமானவரையில் தவிர்த்து எளிதாக வுரைக்கின்றேன். சிலர் ஸ்ரீபாஷ்யத்தையும் சததூஷணியையும் தமிழில் மொழி பெயர்க்கவேணுமென்று விரும்புகின்றார்கள். அந்த உத்க்ரந்தங்களில் ஆழ்ந்த அறிவுபடைத்தவர்கள் அவற்றை ஒருவாறு மொழி பெயர்த்துவிடலாம்; ஆனால் அந்த மொழி பெயர்ப்பு பரிமிதமான அறிவுள்ளவர்களுக்குப் பயன்படுமென்று எனக்குத் தோன்றவில்லை. தர்க்க வியாகரண மீமாம்ஸா சாஸ்த்ரநூல்களையும் ஒருவாறு மொழிபெயர்த்துவிடலாம். அதனால் மிதமதிகள் என்ன லாபமடைய முடியும்? ப்ரக்ருதம் நீ விசிஷ்டாத்வைத தத்வங்களை ஸாரமாக வுணர விரும்புவதனால் எளிதாக வுணர்த்துகின்றேன் கேள்.

சிஷ்யன்— ஸ்வாமிந்! இந்த விஷயத்தில் அடியேன் புதிதாகப் பிரவேசிப் பவனல்லேன். ஏற்கெனவே கற்றுங் கேட்டு மிருக்கிறேன். பரிபாஷைகளைச் சிறிது அறிவேன். தேவரீர் அதிக பரிச்ரமம் கொள்ளாமல் ஸாதித்தருளலாம்.

ஆசிரியர்— முதலில் அவதாரிகை சொல்லுகிறேன் கேள். ''இணங்குநர் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி'' என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே உலகில் பலபல மதங்கள் தோன்றியிருந்தாலும் அவை வைதிக மதமென்றும் அவைதிக மதமென்றும் பொதுவாக இருவகுப்பாகும். வேதத்தைப் பிரமணமாகக்கொள்ளும் மதம் வைதிகமதம். வேதத்தைப் புறக் கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிக மதம். அவைதிக மதங்களிற் காட்டிலும் வைதிக மதம் சிறந்ததென்னுமிடத்தை நாம் விவரிக்க வேணுமோ? வைதிக மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைத தரிசனம் மிகச் சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது ''உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே'' என்கிற பாசுரத்தினால் 'தாம் போதிக்கும் பரமபுரு ஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிர தாயம் பரம வைதிகமென்னத் தட்டில்லை ப்ரமாணம் ப்ரமாதா, ப்ரமேயம் என்று மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில் சீர்மைபெற்று விளங்குவன. ''ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி, தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி—ஏழ்பாருமுய்ய அவர் களுரைத்தவைகள் தாம்வாழி, செய்யமறைதன்னுடனே சேர்ந்து'' என்னுமுபதேச ரத்தினமாலைப் பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப் பட்டிருப்பதை யுணர்வாயாக.

சிஷ்யன்— ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலை சிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதந சரீரகனும் ஸமஸ்த கல்யாண குணாத்மகனுமான ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், *நலமந்தமில்ல தோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்கு மவையென்றும் உணர்ந்திருக்கின்றேன்.

ஆசிரியர்— ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது. பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும் *ப்ரத் யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ் மாத் வேதஸ்ய வேததா* என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர்.

வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரகமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனேமனம்போன படியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானாலும் வேதத்தை ப்ரமாணமாக இசையுமவர்கள் வேதபாஹ்யர்களிற்காட்டிலும் மேம்பட்ட வர்களன்றோவென்று சிலர் நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லை யென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான். [ஸ்ரீவைகுண்டஸ்தவே]

சிஷ்யன்— ஸ்வாமிந்! *பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந், ஜக்தஸ்ய காநந ம்ருகைர் ம்ருகத்ருஷ்ணி கேப்ஸோ; காஸாரஸத்வ நிஹதஸ்ய ச கோ விசேஷ:?* என்கிற அந்த சுலோகத்தை அடியேன் மனப்பாடம் செய்திருக்கிறேன். வேதபாஹ்யர்களும் வேத குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டியுள்ளாரிதில்; விடாய் மிகுந்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன; அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்திற்புகாதே கானலைக் கண்டு பாநீய ப்ரவாஹமாக மயங்கி யோடிக்கொண்டே யிருக்கையில் வழியில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய் தீரப்பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சேர்ந்தும் துறைதப்பி யிழியவே அங்குக்கிடந்த முதலையினாலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசம் இரண்டுக்கும் துல்யமே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்தில் வாசியற்றவர்களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக் கொள்ளைகொண்டு அநுபவித்து ஆனந்திக்கவேண்டுமாதலால் அந்தகைய விஷயங்களை ஸாதித்தருளவேணும்.

ஆசிரியர்— வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். (உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்ட மென்பது.) பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக்கூறும் வேதபாகம் கர்ம காண்ட மென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை விரிவாகக்கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப-நிஷீததி என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அநுகேயுள்ளதென்கை. *வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:* என்கிற கீதையின் படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

(தொடரும்)

# தில்லைத் திருச்சித்திரகூடம்



சிதம்பரம் என்று ப்ரஸித்தமான தென்தில்லைச் சித்திரகூட க்ஷேத்ரத்திற்கு விளக்காக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே நியாயவேதாந்தவித்வானன ஸ்ரீ உ ஷ்ட கோத்ரம் வேங்கடாசாரியர் ஸ்வாமி திருநாடலங்கரித்து இரண்டு மூன்று ஸம்வத்ஸரங்களாய்விட்டன. அந்த ஸ்வாமி அடியேனுக்குப் பரமாப்தராக எழுந்தருளி யிருந்தவராதலால் அவரை அடிக்கடி கனவில் ஸேவிக்கிறேன். அவருடைய புத்ர ரத்னமான ஸ்ரீமான் A. V ரங்காசாரி, M. A., M Litt இதோ இங்குக் காட்சி தருகிறார். பிதுச் சத குண புத்ரமணியானவிவர் தில்லை கோவிந்தராஜப் பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவத்திற்கு முயன்று வருகிறாரென்றறிந்து அம்முயற்சியில் நானும் பங்கு கொள்ளுகிறேன் இத்தலத்தை மங்களா சாஸனம் செய்தருளிய திருமங்கையாழ்வாருடைய பாசுரங்களை நோக்குமிடத்து, இந்தப் பெருமானுக்கு ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுங் காலத்திலேயே அவ்வாழ்வார் இங்கெழுந்தருளி மங்களா சாஸனம் செய்தருளினதாக விளங்குகின்றது; •வாடமருதிடைபோகிப் பதிகத்தில் பாசுரந்தோறும் "வருவான் சித்திரகூடத்துள்ளானே" என்று திருவீதி யெழுந்தருளு முத்ஸவாநுபவமே மிகையாகக் காண்கிறது •வையத்தெவரும்வணங்க அணங்கெழுமா மலைபோலே, தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே• என்கிற பாசுரம் ப்ரஹ்மோத்ஸவ ஸேவையை நினைநாட்டுகின்றது. இம்மஹோத்ஸவம் இடையில் சிலகாலம் நின்றிருப்பதன் காரணமறியோம். இது விரைவில் முன்போல் நடைபெறுமாறு அதிகாரிகள் பெருமனம் கொள்ளவேணும். ... ... ... ... ... *

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# அருளிச்செயலில் அருமையானதொண்டு

(ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்)

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஸ்தலபேதத்தாலே இரண்டு பொருள்களையும் மூன்று நான்குபொருள்களையும் தரவல்ல சொற்கள் பலவுள்ளன. அவற்றையெல்லாம் அகராதிவரிசையில் எடுத்துக்காட்டவேணுமென்று அடியேனுக்குஆசையுண்டாயிற்று. அசக்தியின் மிகுதியினுல் இவ்வாசையை நிறைவேற்றிக்கொள்ள முடியாமலிருக்கிறது சக்தியும் ஊக்கமுமுடையவர்கள் அடியேனுடைய இவ்வாசையை நிறைவேற்றி வைப்பர்களென்கிற நம்பிக்கையினுல் ஆசையின் பரிசை விளக்கிக்காட்டி நிற்கிறேன்.

**அம்பரம்** என்று ஒரு சொல். இது வட சொல். *அம்பரம் வ்யோம வஸ்த்ரயோ:* என்ற வடமொழி நிகண்டின்படி இச்சொல்லுக்கு ஆகாசம், வஸ்திரம் என்கிற இருபொருள்களுள்ளன. திருப்பாவை (பா. 17ல்) இச்சொல் இவ்விருபொருள் களிலும் பிரயோகிக்கப்பட்டிருப்பது காண்க. முதலடியில் வஸ்த்ரப் பொருள், ஐந்தா மடியில் ஆகாசப்பொருள்.

**அல்** (1) அல்லாதது. (2) இரவு, இருள். (1) அல்வழக்கொன்றுமில்லா. (2) அல்லில்தான் வந்தபின்னை.

**ஆல்** (1) ஆலமரம். (2) மூன்ரும்வேற்றுமையுருபு. (3) அசை. (4) ஆதலால் [1] ஆலின்மேலாலமர்ந்தான். [2] *ஆழியாலன்றங்காழியை மறைத்தான் [3] நின்ருரால். [4] மதிநிறைந்த நன்னுளால்.

**இல்** (1) வீடு. (2) இல்லாமை (3) ஏழனுருபு. [1] இல்லம் புகுந்து. [2] குற்றமில்சீர். [3] ஆற்றிலிருந்து.

**ஈர்** (1) இரண்டு. (2) அறுத்தல். (3) இழுத்தல். [1] குலங்களாயவீரிரண்டில். [2] வல்வினையேனையீர்கின்ற குணங்கள். [3] ஈர்த்திடுகின்றன வென்னைவந்திட்டு.

**உரம்** (1) மார்பு. (2) வலிமை. [1] *உரம்பற்றியிரணியனை* [2] *உரம் பெற்ற மலர்க்கமலம். [உதரம் என்கிற வடசொல்லும் உரமென்ருகும்]

**ஊர்** (1) இருப்பிடம். (2) ஊர்தல். [1] ஊராயவெல்லாம். [2] ஊருப்வரி யரவம் * மடலூர்துமே.

நாற்பொருள் சொல்; **நாகம்**—பாம்பு, யானை, புன்னைமரம், சுவர்க்கம். (1) நாகத்தினணை (2) கைந்நாகத்திடர்கடிந்த. (3) கொய்ந்நாகப்பூம்போது. (4) நாகமேந்து மேருவெற்பை.

**விண்ணப்பம்;**—இந்த நூலைப் பூர்த்திசெய்ய வல்லாரின் திருவடியென்தலைமேலவே,

(ப்ர. அ.)

— கடிதங்கள் —

# ஸ்ரீ ராமாநுஜர் ஜய ஸ்தம்பம் அமைப்பு இயக்கம்

ஸ்ரீமான் K. V. *பாஷ்யம்*, தலைவர்: ஸ்ரீராமாநுஜ கருணாலயம்

## ஸ்ரீ மஹாமஹிமோபாத்யாய காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தலைமையில் துவக்கம்

காஞ்சீபுரம் ஸ்ரீதேவாதிராஜனின் திருத்தேர்த் திருநாளாம் 25-5-78 வியாழக் கிழமையன்று மாலை, ஸ்ரீ நம்பிள்ளை சந்நிதியில், ஸ்ரீராமாநுஜ கருணாலயத்தின் சார்பில் நடைபெற்றதான ஸ்ரீராமாநுஜர் ஜயஸ்தம்பம் அமைப்பு அகில இந்திய இயக்கத்தை ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள் தலைமை வகித்துத் துவக்கிவைத்தார்.

யதிஸார்வபௌமராகிய ஸ்வாமி எம்பெருமானாருக்கு உலகம் வியக்கும் வகையில் ஜய ஸ்தம்பம்-வெற்றித்தூண் நிர்மாணம் செய்தாகவேண்டியதன் அவசியத்தைக் குறித்து ஸ்வாமி விரிவானதோர் உபந்நியாசம் சாதித்தார்.

"எம்பெருமானார் இளையாழ்வாராக அவதரித்த ஸ்ரீபெரும்பூதூரிலும், ஸ்ரீவரதராஜனின் திருவடித்தாமரைகளில் பல்லாண்டுகள் ஆஶ்ரயித்திருந்து யதிராஜராக ஸந்நியாச ஆஶ்ரமம் ஸ்வீகரித்த பெருமாள் கோவிலாம் காஞ்சீபுரத்திலும் "எம்பெருமானார் தரிசனம்" என்றுபெயரிட்டு நாட்டிவைத்த நம்பெருமாள் கோவில் கொண்டு எழுந்தருளியுள்ள திருவரங்கத்திலும், "அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்" என்றவாறு சங்கும் சக்கரமும் தரிப்பித்துத் திருமலையப்பனை நமக்கு அளித்தருளிய திருமலையிலும் ஆக நான்கு திவ்யதேசங்களிலுமே ஸ்ரீராமாநுஜ ஜயஸ்தம்பம் ஸ்தாபித்திடவேண்டியது அவசியம்தான் (திருநாராயணபுர பிராந்தியத்தில் ஏற்கெனவே நம் ஸ்வாமிக்கு ஜயஸ்தம்பம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாகையால், அங்கு புதிதாக ஒரு ஜயஸ்தம்பம் வேண்டியதில்லை (இப்படி நான்கு ஜய ஸ்தம்பங்களை நிறுவிடுவது என்பது அபரிமிதமான செலவாகக் கூடிய பிரம்மாண்டமான முயற்சி என்ற காரணத்தால், குறைந்தபட்சம் எம்பெருமானார் அவதரித்த ஸ்ரீபெரும்பூதூரிலும், அவர் அவதரிப்பதற்குக் காரணமாக இருந்த திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் எழுந்தருளியுள்ள சென்னை மாநகரிலுமாவது ஸ்ரீராமாநுஜர் ஜய ஸ்தம்பத்தை உலகம் கண்டு பிரமிக்கும் அளவுக்குப் பெரிய அளவில்—நெடிதுயர்ந்த நிலையில்—எம்பெருமானார் தரிசனம் உலகமெல்லாம் பிரசாரமாகும் வகையில் நாட்டியாக வேண்டியது அத்தியாவசியமான காரியமாகும். "கலையழகும், சம்பிரதாயச் சிறப்புகளும் கொண்டு அமையக்கூடிய ஸ்ரீராமாநுஜ ஜய ஸ்தம்பம் நம் ராமாநுஜ தரிசனத்தின் ஏற்றத்தையும், எம்பெருமானாரின் மகோன்னதச் சிறப்புகளையும் உலகெங்கும் பரப்பிடும் என்ற காரணத்தாலேயே, அதை அமைக்க வேண்டியது மிகமிக முக்கியமான செயலாகிறது. கர்நாடக ராஜ்யத்தில் இருக்கும் சிரவண பௌகொளா எனப்படும் சமணக்ஷேத்திரத்தில் பழங்காலத்திலேயே ஸ்ரீராமாநுஜ ஜய ஸ்தம்பம் ஒன்று

பெரிய அளவில் ஏற்கெனவே ஸ்தாபிக்கப்பட்டு, அதன் மேற்புறத்தில் ஸ்ரீ ராமாநுஜர் விஷயமாக ஐந்து ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்கள் அருளியிருக்கும் "தாடீ பஞ்சகம்" சுலோகங்கள் செதுக்கப்பட்டிருப்பதை எப்போதோ கண்டது என் உள்ளத்தில் வெகு காலமாகப் பசுமையாக இருந்து கொண்டிருக்கிறது.

"ஈடில்லாத, இணையில்லாத வெற்றிகள் எத்தனையோ பெற்று உயர்ந்துள்ளவரான ஏய்ந்த பெருங்கீர்த்தி எம்பெருமானாருக்கு-ஸ்ரீராமாநுஜருக்கு-தமிழகத்தில் ஓங்கி உலகளந்து நெடிதுயர்ந்த ஜயஸ்தம்பம் நாட்டிடும் திருப்பணியை என் அபிலாஷையை நிறைவேற்றிடும் வகையில் ஏற்று, அதற்கென்று ஓர் அகில இந்திய இயக்கமே துவக்கியிருக்கும் ஸ்ரீராமாநுஜ கருணாலயத்துக்கு, அதன் தலைவர் ஸ்ரீகே. வி பாஷ்யம் (நெ. 4, ஆறுவது குறுக்குத் தெரு, டாக்டர் சுப்பராயன் நகர், சென்னை 600024) அவர்களின் மூலம் தங்குதடையில்லாமல் நிதி உதவி போன்ற எல்லா உதவிகளும் செய்திடவேண்டியது ஆத்திகர்கள் குறிப்பாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருடைய தலையாய கடமையாகும். "பல துளிபெருவெள்ளம்" என்றவகையில் எல்லோரும் இதற்கு முன்வந்து உதவிட வேண்டும்."

இவ்வாறு கூறி ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி "ஸ்ரீராமாநுஜர் ஜயஸ்தம்ப அமைப்பு அகில இந்திய இயக்கத்தைத் துவக்கி வைத்ததோடு, ஸ்ரீராமாநுஜ கருணாலயத்தின் ஸ்ரீவைஷ்ணவத்தின் பிரசார சாதனமாக அதன் தலைவர் கே. வி. பாஷ்யத்தை ஆசிரியராகக்கொண்டு வெளிவரும் "கருணாலயம்" என்ற மாதப் பத்திரிகையையும் தொடக்கிவைத்தார்.

இந்த இயக்கத் துவக்க விழாவின் ஆரம்பத்தில் அறிமுக உரை ஆற்றிய ஸ்ரீராமாநுஜ கருணாலயத்தின் தலைவர் ஸ்ரீகே. வி. பாஷ்யம் ஸ்ரீராமாநுஜ கருணாலயம் எம்பெருமானார் விஷயமாக இதுவரையில் செய்து வந்துள்ள பணிகளையும் இனி செய்யவிருக்கும் பணிகள் குறித்த திட்டங்களையும் விவரித்தார்.

'செந்தமிழ் வேதியர்' ஸ்ரீகுமாரவாடி சே. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி தம்முடைய வரவேற்புரையில் ஸ்ரீ ராமாநுஜரின் மகோன்னதச் சிறப்புக்களையும், ஸ்ரீராமாநுஜ தரிசனத்தின் ஈடிணையற்ற ஏற்றத்தையும், ஸ்ரீராமாநுஜ ஜயஸ்தம்பம் நாட்டியாகவேண்டியதன் இன்றியமையாமையையும் உணர்ச்சி பொங்க எடுத்துரைத்தார்.

பிரபலவழக்கறிஞரும் வைஷ்ணவ மகா சங்கத்தின் செயலாளருமான ஸ்ரீ நா. வேணுகோபால நாயக்கர் பி. ஏ. பி. எல் அவர்கள் எம்பெருமானைக் காட்டிலும் எம்பெருமானாருக்கு உள்ள ஏற்றம் என்ன என்பதைக் குறித்தும், ஸ்ரீராமாநுஜர் எப்படி கருணாலயமாகவே திகழ்ந்தார் என்பது பற்றியும் ஆராய்ச்சிச் சிறப்பு வாய்ந்ததொரு உரை நிகழ்த்தினார்.

ஸ்ரீராமாநுஜ கருணாலயம் மாதர் பிரிவின் உபதலைவியான ஸ்ரீரங்கநாச்சியார் அம்மாள் ஸ்ரீராமாநுஜரைக் குறித்து அறிவு நுணுக்கம் வாய்ந்த சொற்பொழிவாற்றினார்.

ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளுடன் "ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு" மங்களச்லோகத்தை வந்திருந்த அனைவரும் கோஷ்டியாக சேவித்த பின்னர் கூட்டம் முடிவுற்றது.

ஸ்ரீ:

# 52-ஆம் ஸ்ரீவைணவ மாநாடு

(திரு. நா. வேணுகோபால் நாயகர், பி.ஏ., பி. எல்., வழக்கறிஞர்.
செயலாளர்: ஸ்ரீவைணவ மகாசங்கம்)

52-ஆம் ஸ்ரீவைணவ மாநாடு, ஸ்ரீவைணவ மகா சங்கத்தின் ஆதரவில், சென்னை உப்புட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுச கூடத்தில் 24—12—1977 முதல் நான்கு நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. சங்கத் தலைவர் (முன்னாள் உயர்நீதிமன்ற நடுவர்) திரு. நெ. கிருஷ்ணசாமி ரெட்டியாரும், சங்கச் செயலாளர் திரு. நா. வேணு கோபால் நாயகரும் அனைவரையும் வரவேற்றனர். தமிழ்நாடு உயர் நீதிமன்ற நடுவர் மாண்புமிகு திரு. வி. இராமசாமி மாநாட்டினைத் தொடக்கிவைத்தார். திருக்குறுங்குடி மடம் ஜீயர் சுவாமிகள், ஸ்ரீ பெரும்பூதூர் எம்பெருமானார் மடம் ஜீயர் ஸ்வாமிகள், உப ஜனாதிபதி திரு. B. D. ஜட்டி, நாடாளுமன்ற துணைச் சபாநாயகர் திரு G.முரகரி முன்னாள் முதல்வர் திரு. மீ. பக்தவச்சலம், திருமலை தேவஸ்தான அறங்காவலர்க் குழுக் தலைவர் திரு. C. அண்ணாராவ், முன்னாள் தமிழ்நாடு உயர் நீதிமன்ற தலைமை நடுவர் திரு. K. வீராசாமி முதலியோரிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்திகளைச் சங்க நிர்வாகக்குழு உறுப்பினர் பேராசிரியர் திரு. மு. இராமதாஸ் யாதவ்வாசித்தார்.

ஸ்ரீமான் அல்லூரி வேங்கடாத்திரி ஸ்வாமி ஆலய சைங்கரிய காரிய நிர்வாக பக்தகோடி சங்கத் தலைவரும், சென்னை சோஷியல் அச்சகத்தின் உரிமையாளரு மான திரு. A. R. பார்த்தசாரதி நாயுடு மாநாட்டிற்குத் தலைமை வகித்துப் பேசுகையில் இராமாநுச நூற்றந்தாதியின் பாசுரங்களைக் கொண்டு அர்த்தபஞ்சகத்தை விவரித்தார்.

மாநாட்டிற்கு எழுந்தருளிய காஞ்சிப் பெரியார், கசடறக் கற்றோர், ஜகதா சாரிய ஸிம்ஹாஸநாதிபதி, பத்மவிபூஷண, பாரதபண்டித மஹாமஹோபாத்யாய, நம் திருப்பாவைப்பெருக்கர் பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள் மாநாட்டை மங்களாசாஸனம் புரிந்தருளியதின் சுருக்கம் வருமாறு:—

ஸ்ரீவைணவ மகாசங்க சார்பில் இந்த 52ஆம் ஸ்ரீவைணவ மாநாடு நடைபெறு கிறது. 52 மாநாடுகளிலும் நான் கலந்துகொண்டுள்ளேன், வேறு யாரும் 52மாநாடு களிலும் கலந்து கொண்டதாக ஏற்படவில்லை —

இப்போது நிகழ்வது பிங்கள ஆண்டு. ஒரு பிங்கள ஆண்டில் நம் இராமா நுசர் அவதரித்தருளினர். 60 ஆண்டுகட்குமுன் ஏற்பட்ட பிங்கள ஆண்டில் நம் கொண்டாட்டமும் நடைபெறவில்லை. சென்ற ஆண்டு மார்கழியில் இந்தப் பிங்கள ஆண்டை ஸ்ரீ இராமாநுசரின் 931வது ஆண்டு விழாவாகக் கொண்டாட வேண்டு மென்ற ஆசையை வெளியிட்டேன். அவ்விதம் வெளியிட்டவேளை நல்லவேளை போலும்! நாடும் நகரமும் நன்கறியப் பல கொண்டாட்டங்கள் நிகழ்ந்த வண்ணமாக இருக்கின்றன! இன்னும் 40 ஆண்டுகள் கழித்து எம்பெருமானாரின் ஆயிரம் ஆண்டு நிறைவுவிழாவையும் நடத்த வேண்டும். எதிராசன் இன்னருளால் இதுவும் நிகழுமாக!

திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் திருத்தகப்பனார் பெரிய கோயில் நம்பியாகிற திருவரங்கத்து அமுதனார் இயற்றியருளிய இராமாநுச நூற்றந்தாதி 108 பாசுரங்களும் 108 பலாச் சுளைகள் தான்!

ஒரு பாசுரத்தில் நீர்ப்பண்டமாகிக் கரைகிறார் அமுதனார்! எம்பெருமானார் திருவடிவாரத்தில் 700 ஜீயர்களும் 12,000 ஸ்ரீவைணவர்களும் எழுந்தருளியிருந்தார்களாம். இவர்கள் மிகச் சிறந்தவர்கள் இப்பெருமையால் எம்பெருமானார், பல் கலையோர் தாம் மன்னவந்த இராமாநுசராகத் திகழ்ந்தார். ஆனால் ஒருவராவது புகழ் மாலை இயற்றி எம்பெருமானாருக்கு அணிவிக்கவில்லை.

இக்குறையை நீக்க அமுதனார், இராமாநுச நூற்றந்தாதியாகிற புகழ்மாலையைத் தொடுத்து ஸ்ரீ உடையவர் திருவடிகளில் சமர்ப்பித்தார்.

மருள் தரும் மாநிலத்தில் பிறந்து மாந்தர்கள் வருந்துகின்றார்கள். காரணம்; நம் பிறவியை நீக்க மண்ணுலகில் அவதரித்தருளிய இராமாநுசரின் சீர்மைகள் பொதிந்த புகழ்ப்பாடல்களை இயற்றாமல் மருளில் மயங்கிக் கிடப்பதுதான்! இராமாநுசரைத் தொழுது பிறவியஞ்சிறையினின்று சுலபமாக விடுபடாமல் இப்படியாக மாந்தர்கள் மருளில் மயங்கி வருந்துகின்றனரே!

நினையார் பிறவியை நீக்கும் பிரானை! இந் நீணிலத்தே
எனையாள வந்த இராமாநுசனை இருங்கவிகள்
புனையார்! புனையும் பெரியவர் தாள்களில் பூந் தொடையல்
வனையார்! பிறப்பில் வருந்துவர்! மாந்தர் மருள் சுரந்தே!

குடை விளங்கு விறல்தானைக் கொற்ற வொள்வாள், கூடலர் கோன் கொடைக் குலசேகரரின் சொல்லால் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலையைஸேவிப்போம்

"அமரர்கள் தந் தலைவனை, அந்தமிழின் இன்பப்
பாவினை, அவ்வடமொழியை" —என்பதால்

பற்றற்றார்கள் பயிலரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும் அரங்கநாதனை உடய வேதாந்தத்தின் திருவுருவமாக நாவுறவழுத்துகிறார்! கைகளால் கொய்மலர்தூய் கூப்புகின்றார்!

மன்னுமா மணிமாட மங்கைவேந்தன் மானவேல் பரகாலன் கலியனான திருமங்கை மன்னனும், திருநெடுந் தாண்டகத்தில் இந்திரற்கும் பிரமற்கும் முதல்வனான எம்பெருமான், இரு நிலம் கால்தீ நீர் விண்பூதம் ஐந்தாயும், செந்திறத்த தமிழோசை வடசொல்லாயும் இருக்கின்றான் என்று அருள்கின்றார். அதாவது அந்த வஸ்துக்களாகவே தமிழ் ஓசை, வடசொல்லாகவே உள்ளானும்.

இன்னும் முதற் பாசுரத்திலேயே மின்னுருவாய், முன்னுருவில் வேதம் நான்காய் என்பதாலே நான்கு வேதங்களையும் உபகரித்தருளினவன் எம்பெருமான் தான் என்று உபதேசிக்கின்றார். எம்பெருமான் நால் வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுகிறவன் என்று கருத்தல்ல.

